



உ
சிவமயம்

# நகரத்தார் ஐக்கிய சங்கம்

# NAGARATHAR FEDERATION

[பதிவு எண் 17 of 1966]



## அமைப்பியலும் - விதிமுறைகளும்





உ

சிவமயம்



# நகரத்தார் ஐக்கிய சங்கம்
# NAGARATHAR FEDERATION

(பதிவு செய்யப் பெற்றது)

## அமைப்பியலும், விதிமுறைகளும்








உ

சிவமயம்

# "நகரத்தார் ஐக்கிய சங்கம்"

[பதிவு எண் 17 ஆப் 1966]

## மாற்றி அமைக்கப்பெற்ற அமைப்பியல்

சங்கத்தின் பெயர் : "நகரத்தார் ஐக்கிய சங்கம்"

### அலுவலகம்

சங்கத்தின் பதிவு அலுவலகம் சென்னையிலும், கிளை அலுவலகங்கள் சங்கத்தின் செயற்குழு தேவையெனக் கருதும் பிற ஊர்களிலும் இருக்கும்.

நோக்கங்களும் அவற்றை நிறைவேற்றும் முறைகளும் :

1. நகரத்தார் இனத்தவரிடமிருந்து உறுப்பினர்கள் கட்டணத்தின் மூலமாகவும், நன்கொடை மூலமாகவும் கிடைக்கக்கூடிய பணங்களையும், சொத்துக்களையும், நம் நாட்டிலும் வெளி நாடுகளிலும் நகரத்தாரினத்தவரால் பொது நன்மைக்கென வழங்கப்பட்டு வசூலிக்கப்பட்டுத் தற்சமயம் பயன்படுத்தப்படாமல் இருக்கும் பணங்களையும், சொத்துக்களையும் சேகரித்து நிருவகித்தல்.

2. பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், தொழில் நுணுக்கப் பள்ளிகள், நூல் நிலையங்கள், புத்தகச்சேமிப்பு நிலையங்கள், மருத்துவமனைகள் முதலியன நிறுவுதல், நிருவகித்தல்

3. ஏழை மாணவ மாணவியரின் கல்விச் சம்பளங்கள், புத்தகங்கள், உணவு, உடை, உறையுள் முதலியனவற்றிற்குத் தேவையான பொருள் உதவி செய்தல்.

4. பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகம், தொழில் நுணுக்கப் பள்ளிகள் போன்றவை அமைந்துள்ள நகரங்களில் மாணவர்கள் தங்கிப் பயிலத் தேவையான விடுதிகள் நிறுவி நிருவகித்தல்.

5. ஏற்கெனவே நிறுவப்பெற்றுள்ள தர்ம சத்திரங்கள் (நகர விடுதிகள்) போன்ற நிறுவனங்களை எடுத்துப் பயன்தரும் முறையில் நிருவகித்தல். ஏழைகளுக்கும், உதவியற்றோர்க்கும் உதவுதல்.

6. வேலை கிடைக்காதிருக்கும் ஆண், பெண்களுக்கு வேலை வாய்ப்புத் தேடித்தரும் பிரிவு ஒன்று அமைத்து வேலை தேடித்தருதல்.

7. பிணியினால் துன்பப்படுகின்றவர்களுக்கு மருத்துவ உதவி செய்தல்.

8. ஆதரவின்றி இருக்கும் ஆண், பெண் இருபாலருக்கும் தொழிற் பயிற்சிக் கூடங்கள் நிறுவி அங்கு அவர்களுக்கு வேலை வாய்ப்பு, உணவு, உடை, உறையுள் வசதி செய்து கொடுத்தல்.

9. வயது முதிர்ந்து ஆதரவின்றி எவ்வித வேலையும் செய்ய முடியாதிருப்போருக்கு உணவு, உடை, உறையுள் வசதி செய்து கொடுத்தல் அல்லது ஒரு குறிப்பிட்ட தொகையை ஆண்டுதோறும் கொடுத்தல்

10 இயல், இசை, நாடகம் ஆகிய முத்தமிழ் வளர்த்தல்.

11. நகரத்தார் சமூகத்தினரிடமிருந்தும் சங்கத்திற்கு வேறு துறைகளிலிருந்தும் கிடைக்கும் பொருள்களையும், பணங்களையும் கொண்டு சங்கத்திற்குத் தேவையானதும் வருமானம் வரக்கூடியதுமான கட்டிடங்கள், மன்றங்கள் வாங்குதல் அல்லது அமைத்தல்

12. சங்கத்தின் அசையும், அசையாப் பொருள்களைப் பொருத்தும், தனித்த முறையிலும், சங்கத்தின் வளர்ச்சிக்காகவும், நோக்கங்களை நிறைவேற்றுவதற்காகவும், பாங்குகள், பிற நிறுவனங்களிலிருந்தும் கடன் பெற்று அபிவிருத்தி செய்தல்.

# "நகரத்தார் ஐக்கிய சங்கம்"

## விதிமுறைகள்.

I. சங்கத்தின் பதிவு அலுவலகம்:

நெ. 3/4, பவளக்காரத் தெரு, சென்னை-1ல், நிறுவப் பெற்றுள்ளது.

II. விதிமுறைகளில் :

1. "சங்கம்" என்று குறிப்பிடுவது நகரத்தார் ஐக்கிய சங்கத்தைக் குறிக்கும்.

2. "நகரத்தார் சங்கம்" என்று குறிப்பிடுவது நாட்டுக்கோட்டை நகரத்தார்களால் நகரத்தார் ஊர்கள் அல்லாத பிற ஊர்களில் ஆரம்பிக்கப் பெற்றுப் பதிவாகி நூறு உறுப்பினர்களுக்குக் குறைவில்லாதிருந்து சங்கத்தின் முக்கிய நோக்கங்களைத் தம் குறிக்கோள்களாகக் கொண்டு நடந்து வரும் நகரத்தார் சங்கங்களைக் குறிக்கும்.

3. "ஆண்டு" என்பது ஒவ்வொரு சித்திரை மாதம் முதல் பங்குனி மாதம் முடிய உள்ள காலமாகும்.

4. "நகரத்தார் ஊர்" என்பது 76 ஊர்கள் என முன்பு குறிப்பிட்ட நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் தற்சமயம் வசிக்கும் ஊர்களைக் குறிக்கும்.

III. உறுப்பினர்கள் :

1. இச்சங்கத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார் களில் 21 வயதிற்கு மேற்பட்ட ஆண், பெண் அனைவரும் உறுப்பினர்களாகத் தகுதியுடையவர்கள்.

2. உறுப்பினர்களில் அ. நன்கொடையாளர்கள் ஆ. ஆயுள் உறுப்பினர்கள் இ. ஆண்டு உறுப்பினர்கள் என மூன்று பிரிவு உண்டு.

அ. சங்கத்திற்கு ரூ. 500-ம் அதற்கு மேலும் கொடுக்கும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் நன்கொடையாளர்களாவார்கள்.

ஆ. சங்கத்திற்கு ரூ. 101 கொடுக்கும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் ஆயுள் உறுப்பினர்களாவார்கள்.

இ. சங்கத்திற்கு ரூ. 1 நுழைவுக் கட்டணமும் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 3 சந்தாவும் கொடுக்கும் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் சங்கத்தின் ஆண்டு உறுப்பினர்களாவார்கள். நடப்பு ஆண்டின் சந்தாவை வரும் ஆண்டின் ஆனித் திங்களுக்குள் செலுத்துவிட வேண்டும். அவ்வாறு செலுத்தத் தவறினால் செலுத்தத் தவறிய நாளிலிருந்து சந்தா பாக்கியை செலுத்தும் வரையிலும் சங்கத்தின் நடவடிக்கைகளில் பங்கு கொள்ளத் தகுறியற்றவர்கள் ஆவார்கள்.

IV. சங்கத்தில் அ. பேரவை ஆ. பிரதிநிதித்வ அவை இ. செயற்குழு ஆகிய மூன்று பிரிவுகள் உண்டு

அ. பேரவை:

1. மேலே மூன்ருவது பகுதியில் குறிப்பிட்டிருக்கும் நன்கொடையாளர்கள் ஆயுள் உறுப்பினர்கள், ஆண்டு உறுப்பினர்கள், கொண்ட அவை பேரவை எனப்படும்.

2. இவ்வவை சங்கத்தின் செயற்குழு குறிப்பிடும் நாட்களில் குறிப்பிட்ட இடங்களில் கூடும்.

3. இவ்வவை குறைந்தது ஆண்டுக்கு ஒருமுறை 21 நாள் முன்னறிவிப்புடன் கூட்டப்பெறவேண்டும்.

4. இவ்வவை நிறைவெண் சங்கத்தின் உறுப்பினர் எண்ணிக்கையில் பத்தில் ஒரு பங்கு அல்லது 100 உறுப்பினர் இவ்விரண்டில் குறைந்தது ஒன்ருகும்.

5. இவ்வவைக்குச் சங்கத்தின் பிரதிநிதித்வ அவைக்குத் தேர்தல் முறையில் வரும் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரமுண்டு.

6. இவ்வவைக்கு, இவ்வவை கூடியிருக்கும்போது கூடியிருப்போரின் பெரும்பான்மை இசைவு பெற்று, சங்கத்தின் விதிமுறைகளை மாற்றி அமைக்கும் அதிகார முண்டு.

7. இவ்வவைக்குச் சங்கத்தின் செயற்குழு, பிரதி நிதித்வ அவை நடவடிக்கைகளை பரிசீலிக்க அதிகாரம் உண்டு.

8. இவ்வவையில் தனி நபர்கள் கொண்டுவரும் தீர்மானங்கள் கூடியிருக்கும் உறுப்பினர்களில் மூன்றில் இரண்டு பங்கு இசைவு பெற்ருல் நிறைவேற்றப்பெறும்.

9. இவ்வவையில் தீர்மானங்கள் கொண்டுவர விரும்பும் தனி நபர்கள், 15 நாள் முன்னறிவிப்புக் கொடுத்து கொண்டுவரவிருக்கும் தீர்மானத்தின் நகலைச் சங்கத்திற்கு அனுப்பிவைக்க வேண்டும்.

10. இவ்வவையில் கூடியிருக்கும் உறுப்பினர்கள் அனைவருக்கும், அவையில் கொண்டுவரப்படும் தீர்மானங்களும். விஷயங்களும் வாக்கெடுப்பு மூலம் தீர்மானிக்கப் பெறும் பொழுது, ஒவ்வொரு வாக்களிக்கும் உரிமை யுண்டு.

11, வாக்கெடுப்பு முறை நேரடியாகவோ மறைமுக மாகவோ இருக்கலாம்

12. இவ்வவைக்குச் சங்கத்தின் தலைவர் தலைமை தாங்கவேண்டும். அவர் வர இயலாத நேரங்களில் துணைத் தலைவர்களில் ஒருவரும், துணைத் தலைவர்களும் வர இயலாத நேரங்களில் கூட்டத்திற்கு வந்திருப் போரின் பெரும்பான்மையினரால் தேர்ந்தெடுக்கப்பெறும் ஒருவரும் தலைமை தாங்கலாம்.

1 . இவ்வவையின் நடவடிக்கைகள் யாவும் செயலா ளரால் குறிப்புப்புத்தகத்தில் எழுதப்பெற்றுத் தலைவரின் ஒப்புதல் பெற்று வைத்துக்கொள்ளப்படவேண்டும்.

ஆ. பிரதிநிதித்துவ அவை:

பிரதிநிதித்துவ அவை என்பது இவ்வமைப்பியலில், கீழ்க் குறிப்பிட்டிருக்கும் தேர்தல் விதி முறைப்படி, நக ரத்தார் ஊர்களிலிருந்து தேர்ந்தெடுத்து அனுப்பப் பெறும் பிரதிநிதிகளையும் நகரத்தார் சங்கங்களின் பிரதி நிதிகளையும் சங்கத்தின் நன்கொடையாளர்களில் ரூ. 5,000 க்கு மேல் கொடுப்பவர்களையும், தன்னகத்தே கொண்டதாகும்.

2. இவ்வவை, சங்கத்தின் செயற்குழு குறிப்பிடும் நாட்களில், குறிப்பிட்ட இடத்தில் கூட்டப்பெறும்.

3. இவ்வவை குறைந்தது ஆண்டொன்றுக்கு இரு முறையாவது கூட்டப்பெற வேண்டும்.

4. இவ்வவை சாதாரணமாக 15 நாட்கள் முன்னறிவிப்புடனும், அவசர நிமித்தம் 10 நாட்கள் முன்னறிவிப்புடனும் கூட்டப்பெறவேண்டும்.

5. இவ்வவை கூடுவதற்குள்ள நிறைவெண் 16 உறுப்பினர் ஆகும். இவ்வவைக் கூட்டத்திற்கு நிறை வெண் இல்லாதபொழுது மறுவாரம் அதே கிழமையில் இவ்வவை கூட்டப்பெறவேண்டும். அப்போது வந்திருக் கும் உறுப்பினர் எண்ணிக்கையே நிறைவெண்ணாகக் கருதப்படும்.

6. இவ்வவையின் உறுப்பினர்களில் குறைந்த அளவு 30 பேர்கள், தக்க காரணம் காட்டி அவையைக் கூட்டவேண்டுமென்று செயற்குழுவுக்கு விண்ணப்பித் தால், விண்ணப்பம் கிடைத்த 30 நாட்களுக்குள் இவ் வவையை சங்கத்தின் பதிவு அலுவலகத்தில் கூட்ட வேண்டும்.

7. இவ்வவையில் எந்தப் பொருளும் நேரடியாக உறுப்பினர்கள் வந்திருந்துதான் விவாதித்து முடிவெடுக்க வேண்டுமே தவிரச் சுற்றறிக்கை மூலம் முடிவெடுக்கக் கூடாது.

8. இவ்வவை, செயற்குழு உறுப்பினர்களை, செயற்குழுத் தேர்தல் முறைப்படி தேர்ந்தெடுக்க வேண்டும்.

9. இவ்வவைக்குச் சங்கத்தின் செயற்குழுவால் செய்யப்படும் ஒவ்வொரு காரியத்தையும் பரிசீலிக்க உரிமையுண்டு.

10 இவ்வவைக்குச் செயற்குழு கொண்டுவரும் தீர்மானங்களையும், கூறும் யோசனைகளையும் ஆதரிக் கவோ நிராகரிக்கவோ மாற்றியமைக்கவோ உரிமை யுண்டு.

11. இவ்வவைக்குச் சங்கத்திற்குக் கேடு விளை விக்கக்கூடிய உறுப்பினர்களைத் தக்க காரணம் காட்டி நீக்குவதற்கு உரிமை உண்டு.

12. இவ்வவையில் விவாதிக்கப்படும் பொருள் களுக்கு வாக்கெடுப்பு மூலம் தீர்வுகாண வேண்டியிருந் தால், அவையிற் கூடியிருப்போர் அனைவருக்கும் ஒவ் வொரு வாக்களிக்கும் உரிமை உண்டு. வாக்குகள் சம மாக இருக்கும்போது, தலைவர் தம்முடைய வாக்கை அளித்துத் தீர்வு காணலாம்.

13. இவ்வவையில் யாரேனும் தீர்மானம் கொண்டு வர விரும்பினுல், 10 நாள் முன்னறிவிப்புடன் செயற் குழுவிற்குத் தாம் கொண்டுவர இருக்கும் தீர்மான நகலை அனுப்பிவைக்க வேண்டும்.

14. இவ்வவையில் நடைபெறும் நிகழ்ச்சிகள் செய லாளர்களால் குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்யப் பட்டுத் தலைவரின் ஒப்புதல் பெற்று வைத்துக் கொள்ளப் பட வேண்டும். இக்குறிப்புக்கள் அவையின் நடவடிக்கை களுக்கு முடிவான சான்று ஆகும்.

15. இவ்வவையின் தீர்மானங்கள் யாவும் செயற் குழுவால் நிறைவேற்றப்பெ றவேண்டும்.

16. இவ்வவையில் நகரத்தார் ஊர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் மூன்ருண்டு காலமும் நகரத்தார் சங்கங்களிலிருந்து அனுப்பி வைக்கப்பட்ட பிரதிநிதிகள் மேற்படி நகரத்தார் சங்கங்களால் மாற்றி அமைத்திருக்கும் விபரங்கள் தெரிவிக்கும் வரையிலும், நன்கொடையாளர்களில் ரூ. 5 000 க்கு மேல் கொடுத்த வர்கள் தங்கள் ஆயுள் காலம் வரையிலும் உறுப்பினர் களாக இருப்பார்கள்.

17. இவ்வவைக்கு, அவை கூடும்போது செயற்குழு சமர்ப்பிக்கும் சங்கத்தின் வரவு - செலவு கணக்குகளை ஆராய்ந்து அங்கீகரிக்க அதிகாரம் உண்டு

இ. செயற்குழு :

1. பிரதிநிதிகள் அவையால் தேர்ந்தெடுக்கப்பட்ட 31 உறுப்பினர்களையும் இவ்வமைப்பில் விதிமுறைகள் பதிவாகும் காலத்தில் சென்னை, மதுரை, திருச்சிராப்பள்ளி கோயமுத்தூர், சேலம் ஆகிய நகரகங்ளில் நடந்துவரும் நகரத்தார் சங்கங்களால் செயற்குழுவிற்கென குறிப்பிடப் பட்ட ஐந்து நியமன உறுப்பினர்களையும் மேலும் இந்த

விதிமுறைகளின்படி அங்கீகரிக்கப்பட்ட நகரத்தார் சங்கங்களால் நியமிக்கப்பட்ட நியமன உறுப்பினர்களையும் ரூ. 20,000/- மும் அதற்கு மேலும் கொடுக்கும் நன்கொடையாளர்களையும் கொண்டது சங்கத்தின் செயற்குழுவாகும்.

2. செயற்குழு உறுப்பினர்கள் தங்களுக்குள் சங்கத்திற்குத் தலைவர் ஒருவர், துணைத் தலைவர் அறுவர், செயலாளர் ஒருவர், துணைச் செயலாளர் ஒருவர், பொருளாளர் ஒருவர் ஆகியோரைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளவேண்டும்.

3. செயற்குழு மூன்று மாதங்களுக்கு ஒரு முறையாவது குறைந்த பட்சம் கூட்டப்பட வேண்டும்.

4. செயற்குழுக் கூட்டம் தலைவரின் ஒப்புதலின் பேரில் செயலாளரால் சாதாரணமாக ஏழு நாட்கள் முன்னறிவிப்புடனும், அவசர நிமித்தம் மூன்று நாட்கள் முன்னறுவிப்புடனும் கூட்டப்பெற வேண்டும்.

5 செயற்குழு உறுப்பினர்களில் ஏழு பேர், பத்து நாட்கள் தவணை கொடுத்து, செயற்குழுக் கூட்டம் கூட்டப்பெறவேண்டும் என்ற அவசியத்தையும், விவாதிக்கப்பெற வேண்டிய பொருள் என்ன என்பதையும் கூறித் தலைவருக்கு விண்ணப்பித்தால், செயற்குழுக்கூட்டம் கூட்டப்பெற வேண்டும்

6. செயற்குழுக் கூட்டத்திற்குச் செயற்குழு உறுப்பினர்களில் 10 பேர் வந்திருந்தால் நிறைவெண்ணிருப்பதாகக் கொள்ள வேண்டும். நிறைவெண் இல்லாத போது, செயற்குழுக் கூட்டம் மறுவாரம் அதே கிழமையில் கூடவேண்டும் அப்போது வந்திருக்கும் உறுப்பினர்களின் எண்ணிக்கை நிறைவெண் ஆகும்.

7. அவசர நிமித்தம் கூடும்போதும், செயற்குழு உறுப்பினர்களின் வேண்டுகோளின் பேரில் கூடும்

போதும் செயற்குழுக் கூட்ட அறிவிப்பில் விவாதிக்கப் பட இருக்கும் பொருள் என்ன என்பதைத் தெளிவாகக் குறிப்பிட வேண்டும்.

8. ஒவ்வொரு செயற்குழுக் கூட்டத்திலும் நடை பெறும் நிகழ்ச்சிகளை நிகழ்ச்சிக் குறிப்பேட்டில் செயலா ளர்கள் பதிவு செய்து, தலைவரின் ஒப்புதல் பெற்று வைத்து, அடுத்து நடைபெறும் செயற்குழுக் கூட்டத்தில் வாசிக்க வேண்டும்.

9. சங்கத்தின் நிருவாகப் பொறுப்பு முழுவதும் செயற்குழுவையே சாரும்.

## செயற்குழுவின் வேலைகளும், அதிகாரங்களும்

10. சங்கத்தின் பேரவைக் கூட்டத்தையும் பிரதி நிதித்துவ அவைக் கூட்டங்களையும் மேற்குறிப்பிட்டிருக் கும் விதிகளின்படி கூட்டுதல்.

11. நகரத்தார் ஊர்களில் சங்கத்தின் உறுப்பினர் களிடையே நடைபெறும் பிரதிநிதிகள் தேர்தல்களுக்குத் தேவையான தேர்தல் அதிகாரிகளை நியமித்தல்.

12. நகரத்தார்களால் ஆரம்பிக்கப்பெற்றுப் பதி வாகி நடந்துவரும் நகரத்தார் சங்களிலிருந்து பிரதி நிதித்துவம் கோரி வரும் விண்ணப்பங்களைப் பரிசீலித்து முடிவு செய்தல்.

13. சங்கத்திற்கு நன்கொடைகள் வசூலித்தல்.

14. சங்கத்தின் நிதியினை எவ்வாறு முதலீடு செய் வது என்பது குறித்து முடிவு செய்து முதலீடு செய்தல்.

15. சங்கத்தின் நோக்கங்களைச் செயல்படுத்துவ தற்குத் தேவையான கிளை அலுவலகங்களை ஏற்படுத்து தல்.

16. சங்கத்தின் பதிவு அலுவலகத்திலும், கிளை அலுவலகங்களிலும் வேலை பார்ப்பதற்காகச் செயலாளரால் நியமிக்கப்படும் நியமனங்களுக்கு ஒப்புதல் அளித்தல்.

17 சங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கான விதிமுறைகளை ஆராய்ந்து செயல்படுத்துதல்.

18. சங்கத்தின் பொருளாளரால் நிருவகிக்கப்பட்டு வரும் கணக்குகளைப் பரிசீலித்து ஒப்புதலைத் தெரிவித்து, மேற்படி கணக்குகளைப் பிரதிநிதித்துவ அவை கூடும்போது சமர்ப்பித்தல்.

19. சங்கத்திற்குத் தேவையான கணக்குத் தணிக்கையாளர்களையும், வழக்கறிஞர்களையும் நியமித்தல்.

20. சங்கத்தின் உதவிகோரி வரும் விண்ணப்பங்களை நேரடியாகவோ, தனிக் குழுக்கள் அமைத்தோ பரிசீலித்து உதவுதல்.

21. செயற்குழுவில், செயற்குழு உறுப்பினர்கள் பதவி விலகுவதாலோ, பிற காரணங்களாலோ ஏற்படும் இடங்களுக்கு அவ்வாறு விலகுபவர் விலகாதிருந்தால் எவ்வளவு நாள் செயற்குழு உறுப்பினராக இருந்திருப்பாரோ அந்தக்காலம் வரைக்கும் உறுப்பினர்களில் ஒருவரைச் செயற்குழு உறுப்பினராக நியமித்தல்.

## V. (அ) தலைவர்

1, சங்கத்தின் பேரவை, பிரதிநிதித்துவ அவை, செயற்குழு, மற்றும் சிறப்புக் கூட்டங்கள் முதலியவைகளில் தலைமை வகிக்கக் கடமை பெற்றவர்.

2. சங்கத்தின் செயலாளர்கள், பொருளாளர் ஆகியோருடைய வேலைகளை மேற்பார்வையிடத் தகுதியுடையவர்.

3. செயற்குழுவால் தீர்மானிக்கப் பெறும் தீர்மானங்களைச் செயலாளர்கள் மூலம் நிறைவேற்ற வேண்டியவர்.

4. சங்கத்தின் நலம் கருதித் தன் ஆலோசனைகளைக் கூறி அவசரமான காரியங்களில் தீர்மானிக்க அதிகாரம் உடையவர்.

துணைத் தலைவர்கள்

தலைவரின் வேலைகள் அனைத்திலும் தலைவருக்குத் துணையாக இருக்கவும், தலைவர் கூட்டங்களுக்கு வர இயலாத சந்தர்ப்பங்களில் சங்கத்தில் நடைபெறும் கூட்டங்களில் தலைமை தாங்கவும் கடமைப்பட்டவர்கள்

(ஆ) செயலாளர்

1. சங்கத்தின் அன்றாட வேலைகளைக் கவனிக்க வேண்டியவர்.

2. சங்கத்தின் செயற்குழு, பிரதிநிதித்துவ அவை, பேரவைக் கூட்டங்களைத் தலைவரின் ஒப்புதல் பெற்றுக் கூட்டக் கடமை பெற்றவர்.

3 கூட்டங்களில் நடைபெறும் நிகழ்ச்சிகளைக் குறிப்பெடுத்துக் குறிப்பு புத்தகங்களில் பதிவு செய்து வைக்க வேண்டியவர்.

4. பேரவை, பிரதிநிதித்துவ அவை, செயற்குழு தனிக்குழு ஆகியவையின் தீர்மானங்களைத் தலைவரின் ஆலோசனையோடு நிறைவேற்ற வேண்டியவர்.

5 சங்கத்துக்குத் தேவையான வேலை ஆட்களை நியமிக்கவும் தேவையில்லாத வேலை ஆட்களை நீக்கவும் அதிகாரம் உடையவர்.

துணைச் செயலாளர்

செயலாளருடைய வேலைகள் அனைத்திலும் துணையாக இருந்து பணியாற்ற வேண்டியவர்.

(இ) பொருளாளர்

1. சங்கத்திற்கு நன்கொடைகள் மூலமாகவும், உறுப்பினர் கட்டணங்கள் மூலமாகவும், சங்கத்தின் முதலீடுகள் மூலமாகவும் கிடைக்கும் பணங்களை, மேற்படி பணங்கள் கிடைத்த ஒரு வார காலத்திற்குள் வங்கி களில் செலுத்த வேண்டும்.

2. சங்கத்தின் தலைவர் அல்லது செயலாளர்களின் சம்மதத்தின் பேரில் சங்க நிதியிலிருந்து சங்கத்தின் நடை முறைச் செலவுகளுக்குப் பணங்கள் கொடுப்பது.

3. சங்கத்தின் செயற்குழுத் தீர்மானிக்கும் அங்கீ காரம் பெற்ற வங்கிகளில் சங்கத்தின் பெயரால் நடப்புக் கணக்கு, தவணைக் கணக்கு முதலியவைகள் ஆரம்பித்து வரவு செலவு செய்வது.

4. சங்கத்தின் பதிவு அலுவலகம், கிளை அலுவல கங்களில் நடைபெறும் வரவு செலவுகளை நிருவகிப்பது.

5. சங்கத்தின் வரவு செலவுகளை ஒவ்வொரு செயற்குழுக் கூட்டத்தின் போதும் செயற்குழு உறுப்பி னர்களுக்குச் சமர்ப்பித்துத் தலைவரின் ஒப்புதல் பெற்று வைத்துக் கொள்வது.

6. சங்கத்தின் தேவைகளை அனுசரித்து பொருளா ளர் தன் வசம் ரொக்க இருப்பாக ரூ, 1,000 வரை வைத்துக் கொள்ளலாம்.

7. சங்கத்திற்கு வரும் பணங்களுக்கு, பொருளா ளர், செயலாளருடன் சேர்ந்து கையெழுத்திட்டு ரசீது கொடுக்கக் கடமைப்பட்டவர்.

## VI. பிரதிநிதித்வ அவையின் உறுப்பினர்களும், அவர்களின் தேர்தல் முறைகளும் :

(அ) நகரத்தார் ஊர்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள். :

1. நகரத்தார் ஊர்கள் ஒவ்வொன்றிலிருந்தும் 100 உறுப்பினர்களும் அதற்குக் குறைவான உறுப்பினர்களும் இருந்தால் பிரதிநிதித்துவ அவைக்கு ஒரு பிரதிநிதியைத் தேர்ந்தெடுத்து அனுப்புவதற்கு உரிமையுண்டு.

2. ஷை ஊர்களில் 100 உறுப்பினர்களுக்கு மேற்பட்டு இருக்கும் ஒவ்வொரு 100 உறுப்பினர்களுக்கும் ஒரு பிரதிநிதி தேர்ந்தெடுத்து அனுப்பும் உரிமை உண்டு. மேற்கொண்டிருக்கும் 100 உறுப்பினர்களைக் கணக்கிடும் போது கடைசியில் ஐம்பதும், ஐம்பத்திற்கு மேற்பட்ட உறுப்பினர்களும் இருந்தால் ஒரு பிரதிநிதி அனுப்பும் உரிமையுண்டு.

3. ஷை ஒவ்வொரு ஊர்களுக்குமான வாக்காளர்கள் பட்டியல் நடைபெற இருக்கும் தேர்தல்களுக்கு 3 மாதம் முன்பு தயாரிக்கப்பட வேண்டும். ஷை பட்டியலில் உள்ளவர்கள் தான் தேர்தலில் வாக்களிக்கவும் தேர்தலில் போட்டியிடவும் உரிமையுடையவர்கள்.

4. நகரத்தார் ஊர்களில் நடைபெறும் தேர்தல்கள் சங்கத்தின் செயற்குழுவால் தீர்மானிக்கப்படும் தேர்தல் விதி முறைப்படி நடைபெற வேண்டும்.

5. பிரதிநிதிகள் தேர்தலில் போட்டியிருப்பின் சங்கத்தின் செயற்குழு நியமிக்கும் தேர்தல் அதிகாரிகளின் மேற்பார்வையில் அந்தந்த ஊர்களில் செயற்குழு குறிப்பிடும் நாட்களில் தேர்தல் நடைபெற வேண்டும்

(ஆ) நகரத்தார் சங்கங்களின் பிரதிநிதிகள்

1. நகரத்தார்களால் செட்டிநாடல்லாத பிற இடங்களில் நாட்டுக் கோட்டை நகரத்தார் 100 பேர்களுக்குக் குறையாத உறுப்பினர்களைக் கொண்டு சங்கத்தின் முக்கிய நோக்கங்களைத் தம் குறிக்கோள்களாக வைத்துப் பதிவு செய்யப்பட்டு நடைபெற்றுவரும் நகரத்தார் சங்கங்கள் விண்ணப்பத்தின் மூலம் சங்கத்தின் அங்கமாக வந்து தம் பிரதிநிதிகளைச் சங்கத்தின் பேரவையிலும் பிரதிநிதித்துவ அவையிலும் உறுப்பினர்களாக்கலாம்.

2. மேற்கண்டவாறு அங்கீகரிக்கப்பட்ட நகரத்தார் சங்கங்கள் ஒவ்வொன்றும் ஆண்டு ஒன்றுக்கு ரூ. 12 வீதம் சங்கத்திற்குச் செலுத்தவேண்டும்.

3. மேற்படி நகரத்தார் சங்கங்கள் ஒவ்வொன்றுக்கும் செயற்குழுவிற்கு ஒருவரையும், மேலும் பிரதிநித்வ அவைக்கு இருவரையும் நியமிக்கும் உரிமையுண்டு. இவ்வாறு நியமிக்கப் பெறுவோர் மேற்படி சங்கத்தின் அங்கீகரிக்கப்பட்ட நியமன உறுப்பினராயிருத்தல் வேண்டும்.

4. மேற்கண்டவாறு அங்கீகரிக்கப்பட்ட நகரத்தார் சங்கங்கள் ஒவ்வொன்றிற்கும் மேலே உள்ள விதியில் குறிப்பிட்டிருக்கும் குறைந்த பட்சப் பிரதிநிதிகள் மூவர் தவிர, டி. நகரத்தார் சங்கங்களில் 100க்கு மேற்பட்ட உறுப்பினர்கள் இருக்கும்போது மேற்கொண்டிருக்கும் ஒவ்வொரு 100 உறுப்பினர்களுக்கும் ஒரு பிரதிநிதி வீதம் அனுப்பிவைக்கும் உரிமையுண்டு. மேற்கொண்டிருக்கும் 100 உறுப்பினர்களைக் கணக்கிடும்போது கடைசியில் ஐம்பதும் ஐம்பதிற்கு மேற்பட்ட உறுப்பினர்களுக்கும் ஒரு பிரதிநிதியெனக் கணக்கிடும் உரிமையுண்டு. இவ்வாறு தேர்ந்தெடுத்தனுப்பப்படும் பிரதிநிதிகள் ஏற்கனவே சங்கத்தின் உறுப்பினராயிருக்காவிடில், உறுப்

பினராகி அவருக்குரிய சந்தாத் தொகையைச் செலுத்த வேண்டும்

(இ) நன்கொடையாளர்கள் பிரதிநிதி

சங்கத்திற்கு ரூபாய் ஐயாயிரத்துக்கு மேற்கொண்டு ரூபாய் பதினுயிரம் வரை நன்கொடை கொடுப்பவர்கள் தங்கள் ஆயுள் காலம் முழுவதும் சங்கத்தின் பேரவை, பிரதிநிதித்துவ அவைகளில் உறுப்பினர்களாக இருப்பார்கள். ரூ 10,000க்கு மேற்கொண்டு கொடுப்பவர்கள் தங்கள் ஆயுள் காலம் முழுவதும், அவருக்குப் பின் அவர்கள் குடும்பத்தில் இருக்கும் மூத்த ஆண் வாரிசும் சங்கத்தின் பேரவை, பிரதிநிதித்துவ அவைகளில் உறுப்பினராக இருப்பார்கள். சங்கத்திற்கு நகரத்தார் சம்பந்தப்பட்ட நிறுவனங்கள், தொழில் நிலையங்கள் முதலியவைகளிலிருந்து ரூ 10,000க்கு மேல் நன்கொடை கொடுத்து நாட்டுக்கோட்டை நகரத்தார் ஒருவரைத் தங்கள் பிரதிநிதியெனக் குறிப்பிட்டால் ஷை நபர் பேரவை, பிரதிநிதித்துவ அவைகளில் உறுப்பினராக இருப்பார் இவ்வாறு நியமிக்கப்படும் நபரை மாற்றி அமைத்துக்கொள்ளும் உரிமை ஷை நிறுவனங்களுக்கு உண்டு.

(ஈ) செயற்குழுத் தேர்தல்:

1. சங்கத்தின் பிரதிநிதித்துவ அவை முதற் செயற்குழுவிற்கு உள்ள உறுப்பினர்கள் 31 பேரையும் முதல் பிரதிநிதித்துவ அவைக் கூட்டத்தில் தேர்ந்தெடுக்க வேண்டும்.

2. மேற்குறிப்பிட்டவாறு தேர்தெடுக்கப்பட்ட செயற்குழு உறுப்பினர்களில் சங்கத் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டவர் தொடர்ந்து மூன்ருண்டும், செயற்குழுவில் பதவி வகிப்பார். மூன்ருவது ஆண்டு தலைவரும், ஆண்டு தோறும் மற்றவர்களில் 10 பேரும் சுற்றுமுறை

யில் விலக வேண்டும். அவ்வாறு ஏற்படும் இடங்களுக்குள்ள உறுப்பினர்களை பிரதிநிதித்துவ அவை ஒவ்வொரு ஆண்டும் தேர்ந்தெடுக்கவேண்டும்.

3. முதற் செயற்குழுவின் உறுப்பினர்கள் யார் யார் எந்தெந்த சுற்றுமுறையில் விலக வேண்டும் என்பதைத் தங்களுக்குள் சீட்டுக் குலுக்கல் முறையில் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

4. ஒரு முறை செயற்குழு உறுப்பினராய் இருந்து சுற்றுமுறையில் விலகுவோர் பிரதிநிதித்துவ அவையில் உறுப்பினராயிருந்தால் மறுமுறையும் தேர்தலில் போட்டியிட உரிமையுடையோர்.

## VII. பொது

1. சங்கத்தின் நடவடிக்கைகளைப் பொதுவாகத் தமிழ் மொழியிலும் தேவையிருப்பின் ஆங்கிலத்திலும் வைத்துக் கொள்ள வேண்டும்.

2. சங்கத்தின் சார்பாக நீதி மன்றங்கள் அரசாங்க அலுவலகங்கள் வரி விதிப்பு அலுவலகங்கள் நகராட்சிக் கழகங்கள் மற்றும் பிற அலுவலகங்களிலும் சங்கத்தின் தலைவர், செயலாளர்கள் நடவடிக்கை நடத்த, எடுக்க அதிகாரம் உடையவர்கள்.

3. சங்கத்தில் சங்கத்தின் பெயரால் அசையும் அசையாப் பொருள்களில் முதலீடு செய்யப்படாதிருக்கும் நிதிகளைச் சென்னை மாநிலத்தில் உள்ள அங்கீகரிக்கப்பட்டுள்ள வங்கிகளில் நடப்புக் கணக்கு, தவணைக் கணக்குகளில் சங்கத்தின் பெயரால் வைத்துக் கொள்ள வேண்டும். ஷை நடப்புக் கணக்குகளைச் செயலாளர் அல்லது துணைச் செயலாளரோடு பொருளாளரும் சேர்ந்து கையொப்பம் இட்டு வரவு செலவு செய்ய அதிகாரம் உண்டு. நடப்புக் கணக்குகளில் ரூ. 10,000க்கு மேல் வைத்துக் கொள்ளக்

கூடாது. ரூ. 10,000க்கு மேல் உள்ள தொகைகளைத் தவணைக் கணக்குகளில் வைக்க வேண்டும். தவணைக் கணக்குகளில் உள்ள பணங்கள் வேண்டும் போது சங்கத்தின் தலைவர், துணைத் தலைவர்களில் ஒருவர், பொருளாளர், செயலாளர் ஆகிய 4 பேரும் சேர்ந்து கையொப்பமிட்டுத் திருப்பிப்பெற வேண்டும்.

4. சங்க உறுப்பினர்கள் யாரும் பொருளாளர் தம் கைவசம் ரொக்க இருப்பாக ரூ. 1000 வைத்துக் கொள்ளுவதைத் தவிர தங்கள் சொந்தப் பொறுப்பில் பாதுகாப்பில் சங்கச் சொத்துக்கள், பொருள்கள். பணங்கள் முதலியவைகளை வைத்துக்கொள்ளக்கூடாது.

5. சங்க நிதிகளைக் கொண்டு நல்ல ஆதரவின் பேரில் முதலீடு செய்யவும் கட்டிடங்கள், மன்றங்கள் முதலியவைகள் கட்டி நிருவகிக்கவும் செயற்குழுவிற்கு அதிகாரம் உண்டு.

6. பேரவையில் தனிப்பட்ட நபர் எவரேனும் தீர்மானங்கள் கொண்டுவர விரும்பினால், பேரவைக் கூட்டத்திற்குக் குறிப்பிட்டிருக்கும் நாளுக்கு 15 தினங்கள் முன்பாகத் தீர்மான நகலைச் செயற்குழுவிற்கு அனுப்பி வைக்க வேண்டும்.

7. செயற்குழு உறுப்பினர்கள் பிரதிநிதித்துவ அவை உறுப்பினர்கள் தேர்ந்தெடுப்பதற்கு உரிய விதி முறைகளைச் செயற்குழு தீர்மானித்துக்கொள்ளலாம்.

8. சங்கத்தின் சொத்துக்கள், பொருள்கள், பணங்கள் யாவும் சங்கத்தின் உறுப்பினர்களிடையே பகிர்ந்து கொள்ளக் கூடியதல்ல. சங்கத்தினைக் கலைக்கும்போது சங்கத்தில் உள்ள சொத்துக்கள், பொருள்கள், பணங்கள் முதலியவற்றைப் பொதுமக்கள் நலன்களுக்காக இயங்கிவரும் நிறுவனங்களிடம் ஒப்பு விக்கலாம்.

9. சங்கத்தில் நிருவகிக்கப்பட்டு வரும் கணக்குப் புத்தகம் முதலியவற்றைச் சங்க உறுப்பினர்கள் யாரேனும் பார்க்க விரும்பினல் செயலாளருக்குத் தெரிவித்து அவர் குறிப்பிடும் நேரத்தில் பார்த்துக் கொள்ளலாம்.

10. சங்கத்தின் செயற்குழு உறுப்பினர்கள் தங்களுடைய பதவிக் காலங்களில் சங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்காக நல்ல கவனிப்போடும் எண்ணத்தோடும், சங்க விதிகளுக்குட்பட்டு எடுத்துக் கொண்ட செயல்களில் தவறுதல் ஏற்பட்டால் அதற்கு அவர்கள் தனித்த முறையில் பொறுப்பாளர்கள் அல்லர்.

பாரி அச்சகம், 127, பிராட்வே, சென்னை-1.